

# சின்ன 'ரா'

கோரத முட்டியில் சாக்கடைச் சந்துக்குப் போகிற வழியில் முனிசிபாலிட்டி தகர கேட்டு போட்டிருக்குமே, எப்போதும் ஒன்றிரண்டு பன்றிகள் 'ரொய்ங், ரொய்ங்' என்று திருகுவாலை சுழற்றிக்கொண்டே அலைந்துகொண்டிருக்குமே, அதனருகில்தான் சுவர் இருந்தது. அது டிராயிங் வாத்தியார் வீட்டு இந்தண்டைப் பக்கம் சுவர். ஒரு சதுர அடிக்கு ஒரே சன்னல்தான் இருக்கும். அதன் வழியாக, அற்ப சங்க்யைக்காக ஒதுக்குபவர்களை அதட்டிக் கொண்டே இருப்பார் வாத்தியார். கொஞ்சம் அயர்ந்தால் நோட்டீஸ் ஒட்டிவிடுவார்கள். காட்டா குஸ்தி, தையல் வகுப்பு, சிட்டுக்குருவி லேகியம், தேவாங்குத் தைலம் என்று! அந்த சுவரில்தான் அது எழுதியிருந்தது.

ஜேவி பாலாமணியை ...க்கிரான்

'...க்கிரானி'ல் சின்ன 'ரா.'

ஜேவி என்பது நான்தான். பாலாமணிக்கு நான் ட்யூஷன் சொல்லிக் கொடுக்கிறேன். டென்த் பி பெண். ஒரு முறை கோட்டு, சாதுவான பெண். கண்ணாடி போட்டுக்கொண்டு கொஞ்சம் மொத்தமாக இருக்கும்.

இந்த மாதிரி சுவரில் எழுதுபவனைத் தண்டிக்க இ.பி.கோ. ஏதாவது இருக்க வேண்டும். இதை யார் எழுதினது என்று எனக்குத் தெரியும். பாலாமணி என்ன வருத்தப்படுவாள்? அவளுடைய தாய் தந்தையர் என்ன மாதிரி துடிப்பார்கள்? அக்கிரமம்! ஒரு பெண் படிப்பில் சோடையாக இருக்கிறாள் என்று ட்யூஷன் சொல்லித் தந்தால் கதை கட்டிவிடுவதா? அதுவும் என்னைப் போல ஒரு சாது கிடையாது. என்னைப் போய்...?

இது நிச்சயம் சங்கர குருப்பு வேலைதான். எனக்குத் தெரியும். குருப்பு மலையாளத்துக்காரனாக இருந்தாலும் ஸ்ரீரங்கத்திலேயே செட்டில் ஆனதால் தமிழ் எழுதப் படிக்க வரும். பேச்சில் கொஞ்சம் தான் மலையாள வாசனை. எங்கள் பள்ளியில் வீவிங் மாஸ்டர்.

குருப்புக்கு என் மேல் ரொம்ப கோபம். வோகேஷனல் ட்ரெய்னிங் என்று வீவிங் வைத்திருந்தார்கள். டென்த் எஃப்பில் கலை என்று ஒரு பெண்ணிருந்தது. அதற்கு நெசவு சொல்லித்தருகிறேன் என்று தறியருகில் வைத்து அதன் ரவிக்கை பட்டனை அவிழ்த்துக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டேன். என்னைப் பார்த்தும் படவா அந்தக் கெட்ட காரியத்தை நிறுத்தக்கூட இல்லை? "சாமிக்கு என்ன வீவிங் கிளாஸில் ஜோலி" என்றான். பற்றிக்கொண்டு வந்தது. அந்தப் பெண் "போங்க ஸார், போங்க ஸார்" என்கிறதே ஒழிய வேறு ஒரு சுரணையும் இல்லை. நேராகப் போய் எட்மாஸ்டரிடம் சொல்லிவிட்டேன். அவர் குருப்பின் இன்க்ரிமெண்டை வெட்டிவிட்டு அந்த வாரத்திலிருந்து பெண்களுக்கு நெசவு கிடையாது என்று சொல்லிவிட்டார். அதிலிருந்து அவனுக்கு என் மேல் ரொம்ப கோபம். மலையாளத்தில் ரொம்பத் திட்டினான். பழிவாங்கத்தான் இப்படிச் சுவரில் எழுதியிருக்கிறான்.

பாலாமணிக்குக் கூடப்பிறந்த எட்டுப்பேரில் ஒன்றுதான் தம்பி. மற்றதெல்லாம் குஞ்சும் குளுவானுமாகப் பெண்கள். அப்பா தாலுகா ஆபீஸில் வேலை. என்ன வேலை தெரியாது. பெண்களுக்குச் சரியான படி சம்பளம் கட்டுவது கிடையாது! பூட்டான், மகாராஷ்டிரா என்று முப்பது நாப்பதுக்கு லாட்டரி டிக்கெட் வாங்குவார், ஜிஞ்சர் அடிப்பார், கழுதை மண்டபத்தில் காசுவைத்துச் சீட்டாடுவார், பெண்டாட்டியை அடிப்பார் என்று பாலாமணி சொல்லியிருக்கிறாள். பெண்களை நிமிர்த்திவிடுவாராம். பிள்ளை ஒன்றுதான் செல்லம்; பேரும் செல்வம்.

நான் டென்த் பி கணக்கு எடுத்துக் கொண்டிருந்தபோது பாலா மணி கிழிசலாக பாவாடை போட்டுக்கொண்டு துடை தெரிவதைக் கண்டு வீட்டுக்குத் துரத்திவிட்டேன். அழுதுகொண்டே போனாள். எனக்கு என்னவோ மாதிரி இருந்தது. வீட்டிற்குப் போய் விசாரித்ததில் மாசம் இருபது தேதியானால் சேஃப்ட்டி பின் வாங்கக்கூட காசு கிடையாதாம்.

எனக்கு பச்சாதாபமாக இருந்தது. சரி இந்தப் பெண்ணை படிப்பில் தேற்றலாம் என்று இலவசமாக ட்யூஷன் சொல்லிக் கொடுக்க இசைந்தேன். அவளை ஷெட்யூல் வகுப்பில் சேர மனுப் போட ஏற்பாடு செய்தேன். ஒரு 'காட்ஃபாதர்'போல அந்தப் பெண்ணை சுவீகரித்துக்கொண்டு இலவசமாக பச்சாதாப எண்ணத்தில் ட்யூஷன் சொல்லிக்கொடுக்க முற்பட்டேன்.

அந்தப் பெண் நன்றாக உருப்போடும். கால் வருஷப் பரிட்சையில் நான்காவது ராங்க் கொண்டு வந்துவிட்டேன். ரொம்ப சந்தோஷம். ஒரு நல்ல காரியத்தைத் துவங்கியதில் திருப்திதான் என்று எண்ணிக் கொண்டிருந்தபோது சுவரில் இந்த அசிங்கம். சின்ன 'ரா'!

முதலில் சங்கர குருப்பின் வீட்டுக்குப் போய் அவனை ஜோட்டால் அடிக்க விரும்பினேன். அவன் வீட்டில் இல்லை, கோட்டைக்குப் போயிருக்கிறான் என்று அவன் மனைவி முண்டும் ரவிக்கையுமாகச் சொன்னாள். சற்றுத் தயக்கத்துடன் பாலாமணியின் வீட்டுக்குப் போனேன்.

"கதிர்வேல் ஸார், இதையெல்லாம் நம்பாதீங்க."

"ஊரே கொல்லுனு போயிருச்சு. இனி என்ன!" என்றார்.

பாலாமணி திண்ணை ஓரத்தில் சமைந்தவள்போல உட்கார்ந்து கொண்டு விசித்து அழுதுகொண்டிருந்தாள். கன்னம் இரண்டு விரல் பதிந்து சிவப்பாக இருந்தது.

"என்னங்க அடிச்சிங்களா? ச் . . . ச் . . . ச் . . ."

"அடிக்காம பின்ன? தோலை உரிக்க வேண்டாம்? ஏண்டி தொடைகாலி முண்டமே! ட்யூஷன் சொல்லிக்கற மூஞ்சியைப் பாரு."

"த பாருங்க, த பாருங்க! ஒண்ணுமே நடக்கலை. இதெல்லாம் அக்கப்போரு. சங்கர குருப்புன்னு வீவிங் மாஸ்டர் இருக்கான். அவனுக்கு என்னைக் கண்டா ஆகாது . . . புரளி."

"புரளி இல்லைங்க இது! நான் உங்களைக் குத்தம் சொல்ல மாட்டேன். இதுதான் ஏதாவது பண்ணியிருக்கும். பாடப் பொஸ் தவத்தைத் தவிர எல்லாத்தையும் படிச்சா? பாருங்கய்யா எங்க சாதியைத் தெரியாது உங்களுக்கு. தள்ளி வெச்சுருவாங்க. ஏற்கெனவே புள்ளம்பாடிக்கு சேதி போயிருச்சு. மாமா ஒருத்தன் வெவசாயம் பார்த்துக்கிட்டு இருந்தான். அவனுக்குப் பேசி வெச்சிட்டு வந்திருந்தேன். இனிமே அவங்க தலைவெச்சுப் படுக்க மாட்டாங்க. மூதேவி!

கோடாரிக் காம்பே! விட்டன்னா பாரு! முழிக்கிறதைப் பாரு குரங்கு மாதிரி!"

"த பாருங்க, அது ஒண்ணுமே செய்யலிங்க. அதும் பேரில் ஏதும் தப்பில்லைங்க."

"எங்க சாதியில சமையறதுக்கு முந்தியே கல்யாணம் செய்துரணுங்க. இப்ப என்ன செய்வேன்? இப்ப என்னதான் செய்வேன்? செத்து ஒழியேன் எங்கயாவது! தம்பி உங்களைச் சொல்லிக் குத்தமில்லை. ஆனா வயசுக்கு வந்த பொண்ணுங்களோட பழகறப்ப கொஞ்சம் உணர்ச்சிங்களைக் கட்டுப்படுத்தியிருக்க வேண்டாமா? இப்ப இவ வாழ்க்கையே பாழாயிருச்சே."

"என்னங்க நீங்களும் நம்பற மாதிரி பேசறீங்க. ஒண்ணுமே நடக்கலிங்க!"

"இனிமே என்னங்க நடக்கணும். ஊரே சிரிக்குது. ஒழியேன்! லால்குடி பாஸஞ்சர்லே தலையைக் கொடேன்! நீ இல்லைன்னு யார் அழுதாங்க!"

"அப்படிப் பேசாதிங்க. இதை சுவத்திலே எழுதின சங்கர குருப்பை உங்க முன்னாடி கொண்டாந்து நிறுத்திக் குத்தத்தை ஒப்புத்துக்க வெச்சு மன்னிப்பு கேக்க வெக்கறேன். அதுவரைக்கும் பொண்ணைத் திட்டாதிங்க."

"இனிமே டாமேஜாயிருச்சில்ல! கடிச்ச பழமுன்னுதானே சொல்லுவாங்க. அய்யோ, ஏழு பொட்டைப் புள்ளைங்களை வெச்சிக்கிட்டு ..."

மறுநாள் காலை பாலாமணியின் வீட்டை அணுகும்போதே துணுக்குற்றேன். ஆரவாரமாக இருந்தது. அருகே போய்ப் பார்த்தால் 'பாலாமணி செத்துருச்சு' என்றார்கள். வயிற்றில் அனல் புறப்பட்டது போல உணர்ந்தேன். உள்ளே ஓடினேன். கூடத்தில் பாலாமணியைக் கிடத்தியிருந்தார்கள். உடம்பு பூராவும் நனைந்திருக்க, "அய்யோ என்ன ஆச்சு! என்ன ஆச்சு!"

"கிணத்திலே விழுந்துருச்சுங்க!' அப்பன் துண்டால் வாயைப் பொத்திக்கொண்டு, "பாலா! பாலா! நான் விளையாட்டுக்குச் சொன்னம்மா. இப்படி பண்ணிட்டியே முட்டாப் பொண்ணே!"

"போய்யா முட்டாளே! நேத்திக்கு நீங்க ஏசின ஏச்சுக்கு" என்று அதட்டினேன்.

"அய்யோ இப்படி செய்யும்னு நெனைக்கல்லியே!"

"போயிருச்சு போயிருச்சு" என்றார்.

நான் அருகே போய் பாலாவைத் தொட்டுப் பார்த்ததில் லேசாக மூச்சு வந்துகொண்டிருப்பதுபோலத் தெரிந்தது. மிகவும் மகிழ்ந்து போய் உடனே ஓடிப்போய் தேர்முட்டி டாக்டரை அழைத்து வந்தேன். அவர் நிமிர்த்தி உட்கார வைத்துக் காலைத் தேய்த்து இன்ஜெக்ஷன் கொடுத்ததில் பாலா கண் திறந்துகொண்டாள்.

"என்னை விட்டுருங்க, விட்டுருங்க! நான் யாருக்கும் உபயோகம் இல்லை, எனக்குக் கல்யாணம் ஆகாது. நான் களங்கப்பட்டுட்டேன். யாரு என்னை ..." என்று மயக்கமாக என்மேல் சாய்ந்தபோது அந்தப் பெண்ணின் பரிதாப நிலையைப் பார்த்து எனக்கு ஆவேசம் வந்ததுபோல, "பாலாமணி. கவலைப்படாதம்மா. நான் இருக்கேன் உனக்கு! என்னாலதான் உனக்கு இதெல்லாம் நேர்ந்தது. நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேன் கண்ணு. கவலைப்படாதே" என்று சபதம் செய்தேன்.

கல்யாணத்திற்கு குருப்பு வந்திருந்தான். "சாமி கோபிக்கக்கூடாது. பகவதி மேல ஆணையா சொல்றேன். அய்யப்பன் பேர்ல ஆணையா சொல்றேன். நான் அதை எழுதலை. ஜேவியின் பேரில எனக்குக் கோபம்தான். ஆனா அதை நான் எழுதியதில்லை!" என்று நெக்குருகினான்.

"எழுதியிருந்தாலும் இப்ப என்ன குருப்பு? உன்னை மன்னிக்கத் தயார். அதுக்கெல்லாம் இப்ப அர்த்தமே இல்லாமப் போயிருச்சே" என்றேன். கல்யாணம் கொஞ்சம் சீக்கிரம்தான். என்ன செய்வது? நிலைமை அப்படி ...

சென்னைக்கு ஸம்மர் ட்ரெய்னிங்குக்கு வந்தபோது என் மனைவி பாலாமணி கடிதம் போட்டிருந்தாள். வீட்டில் தங்கைமார்களிலிருந்து ஆரம்பித்து ரங்கசாமியின் கன்றுக்குட்டிவரை சௌக்கியம் என்று எழுதியிருந்தாள். அப்பா பாவம்! இத்தனை பெண்களுக்கு எப்படித் தான் கல்யாணம் பண்ணி முடிக்கப் போகிறாரோ என்று கவலைப் பட்டு எழுதியிருந்தாள். லேடி டாக்டர் ஊர்ஜிதம் பண்ணிவிட்டா ளாம். ரொம்ப சந்தோஷமாம். அப்புறம் "செல்வம் இப்போதெல்லாம் தினம் படிக்கிரான்" என்று முடித்திருந்தாள்.

படிக்கி? – 'ரா'ன். சின்ன 'ரா.'

இப்போது அவள் கையெழுத்தை உன்னிப்பாகப் பார்த்தேன். எனக்குள் ஒரு சந்தேகம் தோன்றியது.

ஒரு வேளை ...?

சே, இருக்காது.

1983